மலர் 13 இதழ் 264

NAVAMANI (Tamil Daily) MADRAS

Phone No. 76190—76199



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 7—7—73 சனி    வெளியூர் 8—7—73 ஞாயிறு



### மாநில சுயாட்சிக்கு ஆதரவு திரட்ட

# 3 வாரத்தில் கருணாநிதி வெளி மாநிலங்களில் சுற்றுப்பயணம்

பாண்டிச்சேரி, ஜூலை 7— முதலமைச்சர் கருணாநிதி இம்மாதக் கடைசியில் அதாவது இன்னும் 3 வார காலத்தில் வெளிமாநிலங்களில் சுற்றுப் பிரயாணம் மேற்கொள்வார்.

இந்த தகவலை அவர் நேற்று பாண்டிச்சேரியில் நிருபர்களிடம் வெளியிட்டார்.

மாநில சுயாட்சி கோரிக்கைக்கு மற்ற மாநிலங்களின் முதலமைச்சர்களுடைய ஆதரவைத்திரட்டப் போவதாக கருணாநிதி கூறினார்.

வெளி மாநில முதலமைச்சர்களுடன் ஆலோசனை நடத்திய பிறகு மாநில சுயாட்சி கோரிக்கைக்கான போராட்டம் பற்றி முடிவு செய்யப் போவதாக கருணாநிதி தெரிவித்தார்.

பாண்டிச்சேரிக்கு முழு மாநில அந்தஸ்து கிடைக்கும்படி செய்ய பாண்டிச்சேரி திமு கழகம் பாடுபடும் என்றும் அவர் சொன்னார்.

## மராட்டிய வறட்சிப் பகுதியில் மழை

அகமத்நகர், ஜூலை 7— மராட்டிய மாநிலம் அகமத்நகர் மாவட்டத்தில் கடந்த வாரம் நல்ல மழை பெய்திருக்கிறது. இது விவசாயிகளுக்கு பெரும் மகிழ்ச்சியை ஏற்படுத்தியிருக்கிறது.

கடந்த மூன்று ஆண்டுகளாக அகமத் நகர் மாவட்டம் கடுமையான வறட்சியால் பாதிக்கப்பட்டிருந்தது. இந்த ஆண்டு அங்கு 3 லட்சம் ஹெக்டேர் நிலத்தில் சாகுபடி செய்யப்படும்.

## விலை உயர்வை எதிர்த்து அர்த்தால்

பெங்களூர், ஜூலை 7— மைசூர் மாநிலம் ஹரிஹர் நகரில் நேற்று அர்த்தால் நடைபெற்றது. விலை உயர்வைக் கட்டுப்படுத்த அரசு தவறியதைக் கண்டித்து அர்த்தால் நடத்தும்படி ஜனசங்கம் வேண்டுகோள் விடுத்திருந்தது.

ஹரிஹர் நகரம் பெங்களூரிலிருந்து 150 மைல் தூரத்தில் இருக்கிறது.

அர்த்தால் அமைதியாக நடந்ததாகப் போலீசார் கூறினர்.

## 111 பேர்களுக்கு சைக்கிள் ரிக்ஷா

நேற்று கடலூரில் 111 கை ரிக்ஷாத் தொழிலாளிகளுக்கு சைக்கிள் ரிக்ஷா வழங்கிய விழாவும், 1,411 பேருக்கு நிலபட்டா வழங்கு விழாவும், 6,738 பேருக்கு குடியிருப்பு மனைப்பட்டா வழங்கும் விழாவும் 15 விடுதலை வீரர்களுக்கு தாமிரப் பத்திரம் வழங்கும் விழாவும்—மாவட்ட கூட்டுறவு வேளாண்மை பணிமனைக்கான அடிக்கல் நாட்டுவிழாவும், தென்னாற்காடு மாவட்ட காசநோய் தடுப்புச் சங்கச் சார்பில் நடமாடும் எக்ஸ்ரே ஊர்தி வழங்கும் விழாவும் ஒரே மேடையில் நடைபெற்றன.

விழாவுக்கு கல்வி அமைச்சர் நெடுஞ்செழியன் தலைமை வகித்தார். சட்டமன்ற உறுப்பினர்கள் செல்வராஜ், பாபு கோவிந்தராசன், நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி, குறிஞ்சிப்பாடி ராஜாங்கம் ஆகியோர் பேசினர்.

தென்னாற்காடு மாவட்ட காசநோய்த் தடுப்பு சங்கத்தின் சார்பில் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி. இரண்டு லட்சத்து 84ஆயிரம் பெறுமானமுள்ள நடமாடும் எக்ஸ்ரே ஊர்தியினை அமைச்சர் சத்தியவாணிமுத்துவிடம் வழங்கினார்.

குடியிருப்பு மனைப்பட்டாக்களை வழங்கி அமைச்சர் ராமச்சந்திரன் உரையாற்றினார்.

15 விடுதலைப் போராட்ட வீரர்களுக்கு தாமிரப் பத்திரங்களை வழங்கியும் எக்ஸ்ரே ஊர்தியினை வழங்கியும் அமைச்சர் சத்தியவாணிமுத்து உரையாற்றினார்.

இறுதியில் முதல்வர் கருணாநிதி சைகிள் ரிக்ஷாக்களை வழங்கிப் பேசும்போது, அவரிடம் சைக்கிள்ரிக்ஷா நிதிக்காக மாவட்டத்தின் சார்பில் மாவட்ட ஆட்சித் தலைவர் 16 ஆயிரம் ரூபாய் வழங்கினார்.

### பாகிஸ்தான் யோசனை

## ஜூலை 28-ல் இந்தியா-பாகிஸ்தான் பேச்சு

புதுடெல்லி, ஜூலை 7— இந்தியா—பாகிஸ்தான் இடையே அடுத்த நடைபெறும் பேச்சுவார்த்தையை ஜூலை 28-ம் தேதி வைத்துக் கொள்ளலாம் என்று பாகிஸ்தான் யோசனை தெரிவித்திருக்கிறது.

பேச்சுவார்த்தை குறித்து இந்திய வெளிநாட்டு அமைச்சர் சுவரண் சிங், கடந்த 3-ந் தேதி எழுதிய கடிதத்திற்கு பாகிஸ்தான் இந்த பதிலை அனுப்பி எழுதியிருக்கிறது.

இதற்கு முன் நடைபெற்ற பேச்சுவார்த்தை இந்தியாவில் நடைபெற்று இருப்பதால், அடுத்து நடைபெறும் பேச்சுவார்த்தை பாகிஸ்தானில் இருக்கலாம் என்றும் பாகிஸ்தான் கூறியிருக்கிறது.

பாகிஸ்தானின் பதிலை, இந்திய அரசு பரிசீலித்துக் கொண்டிருக்கிறது. தேதியும் இடமும் பிறகு தீர்மானிக்கப்படும்.

கடந்த ஏப்ரல் 17ம் தேதி இந்தியா — பங்களாதேஷ் நாடுகள் வெளியிட்ட கூட்டறிக்கையின் அடிப்படையில் பேச்சுவார்த்தை நடத்தலாம் என்று இந்தியா யோசனை தெரிவித்திருந்தது. இதை ஏற்றுக்கொண்டு பாகிஸ்தான் பதில் அனுப்பியிருப்பதில் முக்கியத்துவம் இருப்பதாகக் கருதப்படுகிறது.

## மத்திய மந்திரி பாய்-திருச்சி காங்கிரஸ் செயலாளர் மோதல்

திருச்சி, ஜூலை 7— மத்திய கனரகத் தொழில் மந்திரி டி. ஏ. பாய்க்கும், திருச்சி மாவட்ட செயலாளரான டாக்டர் வி. ரங்கராஜனுக்கும் இடையே மோதல் ஏற்பட்டது.

நேற்று திருச்சியில் நடந்த மாவட்ட காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் இந்த சம்பவம் நடந்தது.

திருச்சி வர்த்தகசபை நடத்திய வரவேற்பு விழாவில் கலந்து கொள்ள மத்திய மந்திரி பாய் சம்மதம் தெரிவித்தது பற்றி அந்த காங்கிரஸ் கூட்டத்தில் மாவட்ட காங்கிரஸ் செயலாளர் கண்டனம் தெரிவித்தார்.

உணவுத் தானிய வர்த்தகத்தை மத்திய அரசு மேற்கொள்ளும் திட்டத்திற்கு திருச்சி வர்த்தகசபை எதிர்ப்புத் தெரிவித்திருந்ததை மந்திரியின் கவனத்திற்கு ரங்கராஜன் கொண்டுவந்தார்.

"வியாபாரிகளுடன் பேசுவதில் தவறு என்ன? அவர்களை நாம் அழிக்கப்போவதில்லையே. நமது நாடு ஜனநாயக நாடாகும்" என்றார் மந்திரி பாய்.

பின்னர் திருச்சி வர்த்தக சபை நடத்திய வரவேற்பு விழாவில் மத்திய மந்திரி கலந்துகொண்டார். திருச்சியில் உள்ள கனரக மின்சாரக் கருவிகள் தொழிற்சாலையானது 12 கோடி ரூபாய் செலவில் விஸ்தரிக்கப்படும் என்று அப்போது பேசுகையில் மந்திரி கூறினார்.

திருச்சி வர்த்தக சபைத் தலைவர் கே. மாயாண்டி பேசுகையில், திருச்சியில் அனல் மின்சார நிலையம் அமைக்கப்படவேண்டும் என்று வற்புறுத்தினார்.

## சினிமா செய்திகள்

—4-ம் பக்கம்

### ஊழல் புகார்கள் பொய் என்று நிரூபிக்கப்பட்டால்

## ஆயுள் தண்டனை ஏற்க தயார்: மனோகரன் பேச்சு

சென்னை, ஜூலை. 7— முதலமைச்சர் கருணாநிதி அமைச்சரவை மீது நாங்கள் கூறி இருக்கும் குற்றச்சாட்டுக்கள் பொய் என்று நிரூபிக்கப்பட்டால் அதற்காக ஆயுள் தண்டனை பெறத் தயார் என்று அண்ணா தி. மு. க. எம். பி. யான நாஞ்சில் மனோகரன் கூறினார்.

நேற்றிரவு வட சென்னை புவனேஸ்வரி தியேட்டர் அருகே நடந்த பொதுக்கூட்டத்தில் மனோகரன், டாக்டர் ஹாண்டே, மாயத்தேவர் ஆகியோர்கள் பேசினார்கள்.

அந்தக் கூட்டத்தில் மனோகரன் பேசுகையில் கூறியதாவது:—

எம். ஜி. ஆர். ரஷியாவுக்கு புறப்பட்டுச் சென்ற பிறகு எம். ஜி. ஆருக்கு முதலமைச்சர் கருணாநிதி சவால் விட்டிருக்கிறார்.

குற்றச்சாட்டுக்கள் பற்றி ஒரே மேடையில் விவாதிக்கத் தயாரா என்று கருணாநிதி கேட்டு இருக்கிறார்.

நாங்கள் கூறியிருக்கும் குற்றச்சாட்டுக்கள் சாதாரண விஷயம் அல்ல. மிக முக்கியமான குற்றச்சாட்டுகளாகும். இதைப் பொது மேடையில் வாதிப்பது சரியல்ல.

முதலமைச்சர் கருணாநிதி இந்தக் குற்றச்சாட்டுகளைப் பற்றி விசாரிக்க ஒரு நீதிபதியை நியமிக்கட்டும்.

நாங்கள் அங்கே வந்து சொல்லத் தயார். நாங்கள் சொல்லிய குற்றச்சாட்டுகள் பொய்யானால் அதற்காக ஆயுள் தண்டனையும் பெறத் தயார்.

### மக்கள் மன்றம்

முதலமைச்சர் மக்கள் மன்றம், மக்கள் மன்றம் என்று தேடி அலைகிறார். அவருக்கு ஏது மக்கள் மன்றம்?

### இந்திராவுடன் சந்திப்பு

பிரதமர் இந்திராவை எம். ஜி. ஆர். சந்தித்தது பற்றி குறை கூறுகிறார்கள். பிரதமரை எம். ஜி. ஆர். சந்தித்தபோது தி. மு. கழக அரசின் மீது சுமத்தப்பட்டுள்ள குற்றச்சாட்டுக்களைப் பற்றி விசாரிக்க விசாரணைக் கமிஷனை உடனடியாக நியமியுங்கள் என்று எம். ஜி. ஆர். வலியுறுத்தினார்.

### இந்தி எதிர்ப்பு

இந்தி எதிர்ப்புப் போரை அண்ணா தி. மு. க. நடத்துமா என்று கேட்கிறார்கள். தமிழகத்தில் இந்தி ஆதிக்கம் வந்தால் நிச்சயம் அண்ணா தி. மு. க. எதிர்க்கும். இதில் ... சந்தேகமாட்டோம் ... என்றார் மனோகரன்.

### ஹாண்டே

திண்டுக்கல் இடைத்தேர்தலில் தி. மு. க. கழகத்திற்காக பார்வர்டுபிளாக்வரிந்து கட்டி வேலை செய்ததால் தான் தி. மு. க. விற்கு டெபாசிட் பிழைத்தது. தி. மு. க. தனியாக இருந்திருந்தால் டெபாசிட் இழந்திருக்கும் என்று அந்தக் கூட்டத்தில் பேசிய டாக்டர் ஹாண்டே தெரிவித்தார்.

## அமெரிக்காவிடம் ஆயுத உதவி கேட்பேன்: பூட்டோ அறிவிப்பு

நியூயார்க், ஜூலை 7— இந்தியாவுக்கு சமமாக ராணுவ பலத்தைப்பெற பாகிஸ்தானுக்கு ராணுவ ஆயுத உதவி அளிக்குமாறு அமெரிக்க ஜனாதிபதி நிக்சனிடம் கேட்கப்போவதாக பாகிஸ்தான் ஜனாதிபதி பூட்டோ அறிவித்துள்ளார்.

"இந்தியாவின் ஆதிக்கத்தை நாங்கள் ஒப்புக்கொள்ளமுடியாது. இந்தியத் துணைக் கண்டத்தில் இந்தியா ஆதிக்க வல்லரசு ஆவதை நாங்கள் அனுமதிக்க முடியாது" என்றும் பூட்டோ சொன்னார்.

ராவல்பிண்டியில் அமெரிக்கப் பத்திரிகை நிருபர்களுக்கு அளித்த பேட்டியின் போது பூட்டோ இவ்வாறு சொன்னார்.

ஜனாதிபதி பூட்டோ இம்மாதம் 16-ந்தேதி அமெரிக்கா செல்ல இருக்கிறார். அமெரிக்காவில் அவர் 6 நாட்கள் தங்கியிருப்பார். அப்போது அவர் ஜனாதிபதி நிக்சனை சந்தித்துப் பேச்சுவார்த்தை நடத்துவார்.

அமெரிக்க நிருபர்களிடம் பூட்டோ மேலும் பேசுகையில் "இந்தியாவுக்கு இணையாக பாகிஸ்தான் ராணுவ பலம் பெற்று விளங்கவேண்டியது அவசியம். அப்போதுதான் இரு நாடுகளும் தங்கள் தகராறுகளைத் தீர்த்துக் கொண்டு அமைதியாக வாழமுடியும்" என்று கூறினார்.

"நாங்கள் பலவீன நிலையில் இருந்துகொண்டு பேசினால் இந்தியாவுடன் எப்படி சமரசம் காணமுடியும்" என்று அவர் கேட்டார்.

முன்னர் பாகிஸ்தானுக்கும் அமெரிக்கா பேரளவில் ராணுவ உதவி அளித்தது. மீண்டும் அவ்விதம் அமெரிக்காவிடமிருந்து ராணுவ உதவி பெறுவது பற்றி நிக்சனுடன் பேச்சு நடத்தப் போவதாக பூட்டோ கூறினார்.

இது விஷயமாக பூட்டோ ஏற்கெனவே முயற்சி மேற்கொண்டுள்ளார்.

### அமெரிக்காவின் போக்கு என்ன?

பாகிஸ்தானுக்கு ஆயுதங்கள் அளிப்பதில் கடந்த மார்ச் 14-ந் தேதி அறிவிக்கப்பட்ட கொள்கையே நீடிக்கிறது என்று அமெரிக்காவில் அரசு அதிகாரி ஒருவர் கூறினார்.

இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்கும் ஏற்கெனவே அளிக்கப்பட்ட அல்லது விற்கப்பட்ட ராணுவ சாதனங்களுக்கான, பகுதிகளை மட்டுமே விற்போம் என்று 2-ந் தேதியில் அமெரிக்கா அறிவித்தது.

மேற்படி அமெரிக்க அதிகாரி மேலும் பேசுகையில் இது விஷயத்தில் கொள்கை மாறுதல் ஏதாவது எனக் கூற முடியாது" என்றும் சொன்னார்.

"மேற்கொண்டு ஆயுத உதவி அளிக்குமாறு அமெரிக்காவை பாகிஸ்தான் கேட்டுக் கொண்டுள்ளதா என்று கேட்டதற்கு அவர் பதிலளிக்கையில் "இதை இனிமேல் தான் பார்க்க வேண்டும்" என்றார்.

அமெரிக்கா செல்லும் பூட்டோ 20ந்தேதியன்று ஐ.நா. சபைக்கு விஜயம் செய்து ஐ. நா. பொதுச்செயலாளர் வால்ட்ஹைமுடன் பேச்சு நடத்துவார் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.

## ஜெகஜீவன்ராம் ரஷியாவுக்கு புறப்பட்டார்

புதுடெல்லி, ஜூலை 7— இந்தியாவின் ராணுவ இலாகா மந்திரி ஜெகஜீவன்ராம்; இன்று டெல்லியை விட்டு விமானமூலம் ரஷியத் தலைநகரான மாஸ்கோ நகருக்கு புறப்பட்டார்.

இந்தியாவின் பாதுகாப்புத் தேவைகள் பற்றி ரஷியத் தலைவர்களுடன் அவர் முக்கிய பேச்சுவார்த்தை நடத்துவார்.

ரஷிய ராணுவ மந்திரி கிரெஷ்கோ அனுப்பியிருந்த அழைப்பின் பேரில் மந்திரி ஜெகஜீவன்ராம் ரஷியாவுக்குப் போகிறார்.

இந்திய ராணுவ இலாகா செயலாளர் கோவிந்த் நாராயண், அந்த இலாகாவின் விஞ்ஞான ஆலோசகர் நாகசவுத்திரி, கூட்டுச் செயலாளர் பி. எல். ஜெயின் மற்றும் ஜெகஜீவன்ராமின் மனைவி ஆகியோர், மந்திரி ஜெகஜீவன்ராமுடன் போகிறார்கள்.

ரஷியாவில் மந்திரி ஜெகஜீவன்ராம் 10 நாள் சுற்றுப் பிரயாணம் செய்வார். இயற்கை அழகு மிகுந்த இடங்கள், சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இடங்கள் ஆகியவைகளை மந்திரி ஜெகஜீவன்ராம 7 நாள் சுற்றிப் பார்.

கடைசி 3 நாட்களில் அவர் மாஸ்கோ நகரில் தங்கி, ரஷியத் தலைவர்களுடன் முக்கியப் பேச்சுவார்த்தை நடத்துவார்.

18-ந் தேதியன்று அவர் லண்டனுக்குச் செல்வார். அங்கு 3 நாள் தங்கிவிட்டு 22-ந் தேதியன்று டெல்லிக்குத் திரும்புவார்.

இந்தியா, ரஷியா ஆகிய நாடுகளுக்கிடையே நட்புறவு மென்மேலும் பலப்படும் என்று விமானத்தில் புறப்படுவதற்கு முன்னதாக நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் ஜெகஜீவன்ராம் கூறினார்.

## டெல்லி அருகே போலிசார் துப்பாக்கிப் பிரயோகம் தொழிலாளி மரணம்

சண்டிகார், ஜூலை 7— அரியானா மாநிலம் பரிதாபாதில் நேற்று வகுமுறைக் கூட்டத்தைக் கலைக்க போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ததில் ஒரு தொழிலாளி கொல்லப்பட்டார்.

சுமார் 1200பேர் கொண்ட கூட்டம் கல் எறிதலில் ஈடுபட்டதாகவும் 31 கண்ணீர்ப் புகைக் குண்டுகள் வெடித்து தடியடிப் பிரயோகம் செய்தும் பயனில்லாமல் போகவே துப்பாக்கிப்பிரயோகம் செய்ததாக, அரியானா போலீஸ் டி. ஐ. ஜி. வாச்சர் நிருபர்களிடம் தெரிவித்தார்.

அப்பகுதியில் தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. சம்பவம் குறித்து நீதி விசாரணை நடத்த அரியானா அரசு உத்தரவிட்டிருக்கிறது.

வேலைநிறுத்தம்செய்துவரும் குட்டியர் தொழிலாளர்கள் ஊர்வலம் நடத்தியதாகவும், அவர்கள் சாலைப் போக்குவரத்துக்கு தடங்கள் செய்ததாகவும், போலீஸ் அதிகாரி ஒருவருக்கு காயம் ஏற்படுத்தியதாகவும் போலீஸ் தரப்பில் கூறப்பட்டது.

துப்பாக்கிப் பிரயோகத்தில் இருவர் கொல்லப்பட்டதாகவும் பலர் காயம்பட்டதாகவும் அதிகாரப்பற்ற தகவல்கள் கூறின. ஆனால் போலீசார் இதைமறுத்தனர்.

## கிருஷ்ண பக்தியும் ஊதுவத்தி ஏற்றுமதியும்

புதுடெல்லி, ஜூலை 7— 1972—73 ல் ஒரு கோடியே 48 லட்சத்து 80 ஆயிரம் ரூபாய் பெறுமானமுள்ள ஊதுவத்திகள் ஏற்றுமதியாயின. 1970—71ம் ஆண்டில் ஊதுவத்தி ஏற்றுமதியின் மதிப்பு ஒரு கோடியே 27 லட்சத்து ... ஆயிரம் ரூபாய்.

கடந்த சில ஆண்டுகளாக ஊதுவத்தி ஏற்றுமதி வர்த்தகம் நன்கு வளர்ந்து வருகிறது. அமெரிக்கா, ஆஸ்திரேலியா, நியூஜிலாந்து நாடுகளிலும் மற்றும் ஐரோப்பிய நாடுகளில் கிருஷ்ண பக்தி இயக்கம் பிரபலமாகி வருவதைத் தொடர்ந்து அந்நாடுகளில் ஊதுவத்திக்கு ஏகப்பட்ட கிராக்கி ஏற்பட்டுள்ளது.

1973-74-ல் 2 கோடியே 10 லட்சம் ரூபாய்க்கு ஊதுவத்திகளை ஏற்றுமதி செய்ய வேண்டுமென்று இலக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

நவமணி

தனிப்பிரதி 15 காசு வார மலர் 18 காசு

15—●—1971 முதல்

சந்தா விபரம்

| | [illegible] | [illegible] |
|---|---|---|
| ஒரு மாதம் | 4.70 | 5.25 |
| 3 மாதம் | 14.00 | 15.50 |
| 6 மாதம் | 28.00 | 31.00 |
| ஒரு வருடம் | 56.00 | 62.00 |

நவமணி

(7—7—73) சனிக்கிழமை (8—7—73)

# பூட்டோவின் இரட்டை வேடம்

அரசியல்வாதிகளிலேயே இரட்டை வேடம் போடுவதில் இணையற்ற மாமேதையாக இன்று விளங்குபவர் பாகிஸ்தான் அதிபர் பூட்டோ தான்.

சிம்லா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட பொழுது அவர் சிந்தனை தெளிந்தவராகவே தென்பட்டார்.

பாகிஸ்தானுக்குத் திரும்பிச் சென்றதும் பனிமூட்டம் கவ்விக் கொண்டுவிட்டது அவர் மூளையை.

வங்க தேசத்தை அங்கீகரிப்பதில் அவரது அக்கரியற்ற புத்தியே மேலோங்கி இருக்கிறது.

நூற்றுக்கு மேற்பட்ட உலக நாடுகள் அந்தப் புதிய நாட்டின் உதயத்தை ஒப்புக் கொண்டுவிட்டன; உறவுகொள்ளவும் முற்பட்டுவிட்டன.

பாகிஸ்தான் அதிபர் பூட்டோவோ தம் சுண்டு விரலைக் கொண்டே சூரியனை மறைக்கப்பார்க்கிறார்.

இப்போது அறிவுக்கு ஒவ்வாத கற்பனைச் சரடு ஒன்றையும் அவிழ்த்து விட்டிருக்கிறார்.

பாகிஸ்தான் தேசிய சட்டசபையில் வங்க தேசத்தை அங்கீகரிக்கும் தீர்மானம் கொண்டுவரப்படுமாம். ஆனால் அது செல்லத்தக்க சரியான வடிவத்தில் தான் இருக்கிறது என பாகிஸ்தான் தலைமை நீதிமன்றம் — (சுப்ரீம் கோர்ட்) — தீர்ப்பளிக்க வேண்டுமாம்.

இது என்ன நாடகம் என்றே நமக்கு விளங்கவில்லை.

தலைமை நீதிமன்றம் தீர்மானம் சரியில்லை என்று சொல்லிவிட்டால் அந்தத் தப்பைப் பிடித்து தொங்கிக்கொண்டு அங்கீகாரத்தைத் தள்ளிப்போடும் தந்திரந்தானே இது?

சரி, சட்டசபையில் நிறைவேறவேண்டிய ஒரு தீர்மானம் தலைமை நீதிமன்றத்தால் முன்கூட்டியே ஒப்புக்கொள்ளப்படவேண்டுமென்றால் அது எந்த ஜனநாயக மரபுக்கும் உட்பட்டதாக நமக்குத் தெரியவில்லையே!

ஏன், இதைவிட ஒரு கேலிக்கூத்து ஜனநாயகத்தில் இருக்க முடியுமா என்ன?

அதுதான் போகட்டும்; தலைமை நீதிமன்றத்தின் பரிசீலனையில் தீர்மானம் இருக்கும்பொழுது போர்க் கைதிகள் விசாரணையை வங்கதேசம் கைவிட்டால் தான் அந்த நாட்டை அங்கீகரிக்கமுடியும் என்று அதிபராக உள்ள பூட்டோ தலைமை நீதிமன்றத்திற்குக் கடிதம் எழுதலாமா?

இதுவும் ஒருவகை மிரட்டல்தானே?

இதிலிருந்து வங்க தேசத்தை அங்கீகரிக்காமல், போர்க் கைதிகளை விசாரணையின்றித் திரும்பப் பெற்றுவிடவேண்டும் என்கிற பூட்டோவின் தந்திரமே அம்பலமாகிறது.

பாகிஸ்தான் அங்கீகரிக்காததால், வங்கதேசம் பாழாகிவிடாது. அதற்காகக் கொடுமையின் எல்லைக்கே சென்ற பாகிஸ்தான் போர்க்கைதிகளை விசாரணை செய்யாமல் விடக்கூடாது. அப்போது தான் படைவீரர்கள் நெறி பிறழாமல் நடப்பார்கள்.

# ரஷியாவில் எம்.ஜி.ஆர். சினிமா ஸ்டுடியோவை சுற்றிப் பார்த்தார்

மாஸ்கோ, ஜூலை 7—அ.தி.மு.க. தலைவர் எம்.ஜி.ஆர். நேற்று முன்தினம் 'மோஸ் பிலிம்' எனனும் சினிமா ஸ்டுடியோவை 3 மணி நேரம் சுற்றிப் பார்த்தார்.

இந்த ஸ்டுடியோ ரஷியாவில் இருக்கும் பெரிய ஸ்டுடியோக்களில் ஒன்றாகும்.

ஸ்டுடியோ செயல்படும் முறைகளை எம். ஜி. ஆர். மிக அக்கறையுடன் கேட்டு தெரிந்துகொண்டார்.

ரஷ்ய சினிமா கலைகுழுவின் அழைப்பின்பேரில் தான் எம்.ஜி.ஆர். இந்த சுற்றுப் பயணத்தை மேற்கொண்டிருக்கிறார்.

ரஷ்ய சினிமா கலை குழுவினருடன் எம். ஜி. ஆர். பேச்சு வார்த்தை நடத்தியதாக, டாஸ் செய்தி நிறுவனம் அறிவித்தது.

ரஷியாவுக்கும் — இந்தியாவுக்கும் இடையே சினிமாத் துறையில் தொடர்ந்து ஒத்துழைப்பு இருந்து வருவது குறித்தும் இரு நாடுகளும் கூட்டாக படம் தயாரிப்பது குறித்தும் அப்போது விவாதிக்கப்பட்டதாக டாஸ் கூறியது.

# உடனடி நஷ்டஈடு: மத்திய மந்திரி வலியுறுத்தல்

புதுடெல்லி, ஜூலை 7—ராணுவத்தின் தேவைகளுக்காக பொதுமக்களிடமிருந்து எடுத்துக்கொண்ட நிலங்களுக்கு எவ்வளவு நஷ்டஈடு தரவேண்டுமென்பதை உடனடியாக மதிப்பிட்டு அதைக் கொடுத்துவிட வேண்டுமென்று பாதுகாப்பு அமைச்சர் ஜெகஜீவன்ராம் வலியுறுத்தியிருக்கிறார்.

விவசாயிகளிடமிருந்து நிலத்தை எடுத்துக்கொண்ட பிறகு அவர்களுக்கு உடனடியாக நஷ்டஈடு தராவிட்டால் மிகுந்த தொல்லை ஏற்படுகிறது என்று அவர் கூறினார்.

ராணுவ நிலங்கள் மற்றும் கன்டோன்மெண்ட் சர்வீஸ் அதிகாரிகள் சங்கத்தின் பொதுக்குழுக் கூட்டத்தை இன்று துவக்கிவைத்துப் பேசு...

...கையில் நஷ்டஈடுகளை உடனடியாக வழங்குவதற்கு விதிகள் தடையாக இருந்தால் அவற்றை மாற்றவேண்டும் என்று அமைச்சர் கூறினார்.

# துவக்க இருக்கும் கட்சியின் கொள்கை என்ன? மணலி கந்தசாமி பேட்டி

சென்னை, ஜூலை 7—தாங்கள் அமைக்க இருக்கும் புதிய கட்சியானது கம்யூனிஸ்டு கட்சி, மார்க்சிஸ்ட் கட்சி ஆகிய இரண்டுக்கும் இடைப்பட்டதான கொள்கையைப் பின்பற்றும் என்று மணலி கந்தசாமி எம்.எல்.ஏ. அறிவித்துள்ளார்.

கட்சியிலிருந்து தான் வெளியேறியுள்ளதானது மற்ற மாநிலக் கிளைக் கட்சிகளிலும், கட்சி மேலிடத்திலும் விளைவை உண்டாக்கும் என்றும் மணலி கந்தசாமி கூறியுள்ளார்.

தமிழ்நாடு கம்யூனிஸ்டு கட்சிப் பொதுச் செயலாளரான கல்யாணசுந்தரத்துடன் இனி சமரசத்துக்கே இடமில்லை, என்று மணலி கந்தசாமி நேற்று நிருபர்களுக்கு அளித்த பேட்டியில் கூறினார்.

ஏ. கே. சுப்பையாவுடன் பேச்சு நடத்தத் தயாராக இருப்பதாக டெல்லியில் கல்யாணசுந்தரம் கூறியிருக்கிறாரே என்று கேட்டபோது "அது நடக்காது. ஏ.கே.சுப்பையா தான் என்னை இந்த முடிவுக்கே உந்தித் தள்ளியவர்" என்று மணலி கந்தசாமி கூறினார்.

## உள் கட்சிப் போராட்டம்

கடந்த இரண்டு ஆண்டுகளாக கட்சிக்குள் நடக்கும் உள் கட்சிக் கொள்கைப் போராட்டங்களுக்கெல்லாம் மூலகாரணமாக இருந்து வந்துள்ள கல்யாணசுந்தரம் ஒன்றுமே தெரியாதவர் போல பேசியிருப்பது வியப்பு அளிப்பதாக உள்ளது.

கட்சியின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு மக்களைப் பக்குவப்படுத்துவதற்குப் பதில் எடுப்பார் கைப்பிள்ளையாக மாறிவிடக்கூடாது என்பதைக் கடந்த இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகவே நான் சுட்டிக்காட்டி வந்திருக்கிறேன் என்றும் மணலி சொன்னார்.

மணலி கந்தசாமி பேலும் கூறியதாவது:— டெல்லியிருந்து கல்யாணசுந்தரம் விடுத்துள்ள அறிக்கையில் சுப்பையாவின் ராஜிநாமாவை கட்சி இன்னும் ஏற்கவில்லை என்றும் அவருக்கு கட்சியில் ஏதாவது மனக்குறை இருக்குமானால் பேசித் தீர்த்துக் கொள்ளலாம் என்றும் கூறியுள்ளார். அதாவது சமரசம் செய்துகொள்ளலாம் என்று கூறியுள்ளார்.

ஏ. கே. சுப்பையாவைப் பொறுத்தவரையில் அவர் எவ்விதமான பேச்சுவார்த்தைக்கும் தயாராக இல்லை. என்னை இந்த முடிவுக்குத் தூண்டியவரே அவர்தான். அப்படிப்பட்டவர் எவ்வித சமரசத்துக்கும் சம்மதிக்க மாட்டார்.

கம்யூனிஸ்டு கட்சியை உடைக்க வேண்டும் என்பது என் நோக்கமல்ல. கொள்கை ரீதியாக மக்களைப் பக்குவப்படுத்துவதற்குப் பதில் சந்தர்ப்பவாத அரசியல் நடத்தும் வகைத்தான் ஆட்சேபிக்கிறேன்.

சட்டசபைத் தேர்தலில் யாருடனும் கூட்டு சேராமல் நின்றால்கூட கட்சிக்கு சில இடங்கள் கிடைக்கும். அப்படி இருக்கும்போது 7, 8 இடங்களுக்காக இன்னொரு கட்சியுடன் ஏன் கூட்டு சேர வேண்டும்?

கொள்கை அடிப்படையில் கூட்டு சேரலாம். அப்படி இல்லாமல் சில இடங்களுக்காக கூட்டு சேர வேண்டுமா என்று ஆரம்பத்திலிருந்தே நான் ஆட்சேபித்திருக்கிறேன்.

தி.மு. கழகத்துடன் கூட்டு கூட்டுசேர்ந்ததையே ஆரம்ப கட்டத்தில் எதிர்த்தவன் நான்.

## அரசியல்வாதி அல்ல

இப்போது நிலவரம் என்ன? தி. மு. கழகத்தில் உள்ளவர்களாவது அரசியல் வாதிகள். கல்யாணசுந்தரம் சரண் அடைந்துள்ள எம். ஜி. ஆர். அரசியல்வாதி அல்ல.

எம் ஜி ஆருக்கு வருகிற கூட்டத்தை எம். ஜி. ஆராலேயே திருத்த முடியவில்லை அப்படியிருக்கும்போது நாம் அவர்களைப் பக்குவப்படுத்தி நம் கொள்கைக்கு அழைத்து வருவது நடக்கக் கூடியதா?

கட்சியில் இவ்வளவு பெரிய நெருக்கடி ஏற்பட்டதற்கு காரணம் கல்யாணசுந்தரமே.

இவ்வாறு மணலி கந்தசாமி கூறினார்.

# கடலுக்கு அடியில் தண்ணீர் குழாய்கள்

புதுடெல்லி, ஜூலை 27—அணுசக்தி இலாகாவைச் சேர்ந்த நாடாளுமன்ற ஆலோசனைக் குழு உறுப்பினர்கள் சென்னை அணுசக்தித் திட்டத்தையும், கல்பாக்கத்தில் கட்டப்பட்டுவரும் அணு உலை ஆராய்ச்சி நிலையத்தையும் நேற்று சுற்றிப் பார்த்தனர். அணுசக்தி கமிஷன் தலைவரும், நிலையத்தைச் சேர்ந்த உயர் அதிகாரிகளும் ஆலோசனைக் குழு உறுப்பினர்களை சென்னை அணுசக்தி திட்டத்தின் பல்வேறு பகுதிகளுக்கு அழைத்துச் சென்று விளக்கினர்.

அணு மின் நிலையத்தைச் சேர்ந்த இயந்திரங்களைக் குளிர்விப்பதற்காக கடல் நீரைக் கொண்டுவரும் பொருட்டு கடலுக்கடியில் தண்ணீர்க் குழாய்கள் அமைக்கப்படும் பணி விஷயத்தில் உறுப்பினர்கள் மிகுந்த ஆர்வம் காட்டினர். கடலுக்கடியில் இம்மாதிரி தண்ணீர்க்குழாய்கள் அமைக்கப்படுவது இந்தியாவிலேயே இதுதான் முதல் தடவையாகும்.

நேற்று பகலில் நாடாளுமன்ற ஆலோசனைக் குழுக் கூட்டம் மத்திய உள்துறை ராஜாங்க அமைச்சர் கே. சி. பந்தின் தலைமையில் நடந்தது. அணுசக்தி இலாகாவின் ஐந்தாவது திட்ட அணு கொள்கை முறை பற்றி ஆலோசனைக் குழு விவாதம் நடத்தியது.

## நீர்மட்டம்

சென்னை, ஜூலை 7—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 27.63 | மீட்டர் |
| பெரியாறு | 4.63 | " |
| வைகை | 15.70 | " |
| பாபநாசம் | 20.76 | " |
| கிருஷ்ணகிரி | 12.[illegible] | " |
| சாத்தனூர் | 19.83 | " |
| மணிமுத்தாறு | 18.[illegible] | " |
| பேச்சிப்பாறை | 9.[illegible] | " |
| பெருஞ்சாணி | 13.64 | " |

# விவசாய மண்வள ஆராய்ச்சி

சென்னை, ஜூலை 7—நிலத்தின் வளத்தை மண் மாதிரி சோதனை செய்வதன்மூலம் அறிந்து, தேவைக்கேற்ப உர அளவை நிர்ணயம்செய்து மகசூலை அதிகப்படுத்தவும் தேவையில்லாமல் பயிரிடும் செலவைக் குறைக்கவும் முடியும். இந்த விஞ்ஞான முடிவை விவசாயிகளுக்கு விளக்குவதற்காகச் செங்கற்பட்டு, வட ஆற்காடு மாவட்டங்களில் இ.ஐ.டி—பாரி நிறுவனமும், மதராஸ் பர்டிலைசர் ஸ்தாபனமும் மதுராந்தகம் கூட்டுறவு சர்க்கரை ஆலையின் முழு ஒத்துழைப்போடு ஒரு தீவிர திட்டத்தை இருவார காலம் அமுல் படுத்தினர்.

இத்திட்டத்தின் முடிவில் ஜூலை 30-ம் தேதி சர்க்கரை ஆலை அரங்கில ஆலையின் தலைவர் கே. டி. எஸ். மணி அவர்கள் தலைமையில் "மண் பரிசோதனை கருத்தரங்கு" நடத்தினார்கள். கருத்து கண்காணிப்பாளர் பி. பரமானந்தம் துரித மண் பரிசோதனை திட்டத்தைப் பற்றி பேசினார். நிர்வாக இயக்குநர் பி. சாந்தலிங்கம் பேசுகையில் தமிழ்நாட்டு விவசாயிகளுக்குப் பாரி நிறுவனம் ஆற்றிவரும் பணியைப் பாராட்டி மண் பரிசோதனை முடிவுகளை விவசாயிகளுக்குத் தொடர்ந்து விளக்க வேண்டும் என்று கூறினார்.

மதராஸ் பர்டிலைசர்ஸ் நிறுவன துணை மேலாளர் டி. கணபதி பேசுகையில், தங்கள் நிறுவனம், பாசன நீர் பரிசோதனையும் செய்வதாக அறிவித்தார்.

கருத்தரங்கிற்கு ஏற்பாடு செய்த இ ஐ டி—பாரி வட்டார அலுவலர், பி. துரைசாமி இந்த திட்டத்தின் கீழ் 26 கிராமங்கள் முழு அளவில் பலனடைந்துள்ளதாகவும், இருவார காலத்தில் 3099 மண் மாதிரிகள் எடுக்கப்பட்டதாகவும், 14 விவசாயிகள் கூட்டங்கள் நடத்தியுள்ளதாகவும் இதைத் தொடர்ந்து உர சிபாரிசுகளை விளக்க ஏற்பாடு செய்யப்படும் என்றும் கூறினார்.

கிராமத்தை மையமாகக் கொண்டு, எல்லா விவசாயிகளின் நிலங்களிலும் ஒரே நாளில் மண் மாதிரி எடுப்பது இதுதான் முதல் தடவையாகும்.

## சென்னை மார்க்கெட்

சென்னை, ஜூலை 7—

### தங்கம்

(24 காரட்) சுத்த தங்கம் 10 கிராம் ரூ. 336 50

(22 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 32 00

(14 காரட்) சில்லரை 1 கிராம் ரூ. 20 00

### வெள்ளி

பார் வெள்ளி (1 கி. கி.) ரூ. 645 00

உள்ளூர் வெள்ளி ரூ. 688 00

வெள்ளி 10 கிராம்) ரூ. 6 55

### மணிலாப்பயறு

மாரிகால பட்டாணி 80 கி. கி. ரூ. 340 00

### மணிலா எண்ணெய்

மொத்த விலை ரூ. 785 00

சில்லரை விலை ரூ. 8 30

### விளக்கெண்ணெய்

(100 கி. கி.) சென்னை கிடங்கு டெலிவரி திருப்பத்தூர் மொத்த விலை ரூ. 680 00

சேலம் தாமரை அன்னம் மார்க் (16 05கி.கி.) ரூ. 102 00

### தேங்காய் எண்ணெய்

16.06 கி.கி.) டின் எம். எஸ். மார்க் ரூ. 147 00 முதல் 149 00

### நல்லெண்ணெய்

17 கி. கொண்ட டின் 1-க்கு (அக்மார்க் குருபரன் மார்க்) ரூ. 127 00

விற்பனை வரி தனி

சில்லரை கிலோ 1-க்கு) ரூ. 8 20

### கடலைப்பிண்ணாக்கு

கி. கி. கொண்ட மூட்டைக்கு 70 எக்ஸ்பெல்லர் ரூ. 130 00

# தோட்ட ஊழியருக்கு போனஸ் உடன்பாடு: ரூ. 1 கோடி கிடைக்கும்

கோவை ஜூலை 7—தமிழ்நாட்டில் உள்ள ஒரு லட்சம் தோட்ட தொழிலாளர்களுக்கு இந்த ஆண்டு ரூ, 1 கோடிக்குமேல் போனஸ் கிடைக்கும்.

தமிழ் நாட்டில் உள்ள ஒரு லட்சத்திற்கு மேற்பட்ட தேயிலை, காபி தோட்டத் தொழிலாளருக்கு, இந்த ஆண்டு ஒரு கோடி ரூபாய்க்கு மேல் போனஸ் கிடைக்கும்.

இன்று இங்கு இரு தரப்பினருக்குமிடையே இது சம்பந்தமாக உடன்பாடு ஏற்பட்டது.

இந்த உடன்படிக்கையின் படி 1972க்குத் தங்கள் ரொக்க வருமானத்தில் 10.75 சதவிகிதத்தை தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் போனஸாகப் பெறுவார்கள். காபித் தோட்டத் தொழிலாளர்கள் ரொக்க வருமானத்தில் 10 சதவிகிதம் போனஸாகப் பெறுவார்கள்.

[illegible] ஆண்டைக் காட்டிலும் போனஸ் விகிதமும் கொஞ்சம் அதிகம். அதுதவிர இந்த ஆண்டில், தோட்டத் தொழிலாளர்கள் சம்பளமும் கணிசமாக உயர்ந்துள்ளது. இவைதான் இந்த ஆண்டில் போனஸ், தொகை கணிசமாகக் கூடியிருப்பதன் காரணம்.

போனஸ் சம்பந்தமான பேச்சு வார்த்தைகளில் தமிழ்நாடு தோட்ட அதிபர்கள் சங்கம், நீலகிரி தோட்ட அதிபர்கள் சங்கம், ஆனமலை தோட்ட அதிபர்கள் சங்கம், வைனாடு தோட்ட அதிபர்கள் சங்கம், முதலிய சங்கங்களின் பிரதிநிதிகள் அதிபர்கள் சார்பில் கலந்து கொண்டனர். தோட்ட தொழிலாளர்கள் சார்பில் இந்திய தேசிய தொழிற் சங்கக் காங்கிரஸ் திராவிட முன்னேற்றக் கழகம், ஹிந்துஸ்தான் மஜ்தூர் சங்கம், தொழிலாளர் முன்னேற்ற சங்கம், ஆனமலை தேசிய எஸ்டேட் தொழிலாளர் யூனியன், அகில இந்திய தொழிற்சங்க மையம், தேசிய எஸ்டேட் தொழிலாளர் யூனியன் காங்கிரஸ் முதலிய சங்கங்களின் பிரதிநிதிகள் கலந்துகொண்டனர்.

# 10 பைசா திருடிய பையன் கொலை: தகப்பனர் கைது

பம்பாய், ஜூலை, 7—பத்து பைசாவைத் திருடிய ஒரு பையனை, அவனது தந்தை அடித்ததால் பையன் மரணமடைந்தான்.

பையனிடம் இருந்த பத்து பைசா எப்படிக் கிடைத்தது என்று தந்தை கேட்டிருக்கிறார். முதலில் பத்துபைசா சாக்கடை ஓரத்தில் இருந்து கிடைத்ததாக பொய் சொன்னான். பிறகு, அதை வேறொரு குழந்தையிடமிருந்து திருடியதாக ஒப்புக் கொண்டான்.

இதை அறிந்து கோபம் அடைந்த தந்தை நீளமான ரப்பர் குழாய் ஒன்றினால் பையனின் தலையில் அடித்தார். அதனால் பையன் மரணமடைந்தான். தந்தையை போலீசார் கைது செய்துள்ளனர்.

# புது காங்கிரசில் உள்கட்சி பூசல்: இந்திரா வருத்தம்

பம்பாய், ஜூலை 7—"நாட்டை பெரிய பிரச்சனைகள் எதிர்நோக்கி இருக்கும்போது உள்கட்சிப் பூசலில் ஈடுபடுவது சரிதானா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்" என்று தனது கட்சியினரை பிரதமர் இந்திரா கேட்டுக் கொண்டுள்ளார்.

பம்பாயில் புது காங்கிரஸ் கட்சி ஊழியர்கள் ராஷ்டிரீய மில் மஜ்தூர் சங்கத்தைச் சேர்ந்த தொழிலாளர்கள் ஆகியோர் அடங்கிய கூட்டத்தில் பேசுகையில் பிரதமர் இந்திரா காந்தி இவ்வாறு கூறினார்.

ஆரம்பத்தில் பிரதமர் இந்திரா காந்தியை பம்பாய் பிரதேச புது காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ரஜனி படேல் வரவேற்றுப் பேசுகையில் "கட்சியில் உள்ள பலவீனங்கள் பற்றியும், கருத்து வேறுபாடுகள்" பற்றியும் குறிப்பிட்டார்; கட்சிக்குள் நடைபெறும் சண்டைகள் அர்த்தமற்றவை என்று குறிப்பிட்டார்.

"கட்சிக்குத் தீங்கு விளைவிப்பது எதிர்க்கட்சிகள் அல்ல நமது கொள்கைகளை ஏற்காமல் நம் கட்சிக்குள் இருக்கும் எதிரிகளே" என்றார் ரஜனி படேல்.

பிரதமர் இந்திரா காந்தி ரஜனி படேல் இவ்வாறு சொன்னதைக் குறிப்பிட்டு, உள்கட்சிப் பூசல் பற்றிக்கூறியதாவது—கட்சியில் உள்ள யாராவது ஒருவரைப் பற்றி மற்றவர் என்னிடம் புகார் கூறாத நாளே இல்லை. நாட்டில் சமூக-பொருளாதாரப் புரட்சியை ஏற்படுத்துவதற்கான பெரும்பணிகளைச்செய்ய வேண்டிய பொறுப்பு இருக்கும் இந்த நேரத்தில் கட்சி உறுப்பினர்கள் இவ்விதம் பரஸ்பரம் புகார்களைக் கூறுவதும் அர்த்தமற்றவை.

## அற்ப பூசல்கள்

மக்கள் அனைவரையும் எதிர்ப்பட்டுள்ள பல்வேறு சங்கடமான பிரச்னைகளைச் சமாளிப்பதில் நான் மூழ்கியிருக்கிறேனே தவிர கட்சிக்குள் நிலவும் அற்பபூசல்களைத் தீர்ப்பதில் அல்ல.

எனவே தாலுகா காங்கிரஸ் கமிட்டியிலிருந்து பிரதேச காங்கிரஸ் கமிட்டி வரையிலான கட்சி அமைப்புகள் அனைத்தும்தங்கள் செயல்கள் பற்றி சிந்தித்துப்பார்த்து நாட்டில்சமூக-பொருளாதார புரட்சியை விரைவுபடுத்த என்ன செய்யலாம் என்று யோசிக்கவேண்டும்.

தங்களுக்குள்ள மனக்குறைகள் உண்மையானவைதானா என்று கட்சியினர் ஆழ்ந்து... மில் அதிபர்களுக்கும் தொழிலாளர்களுக்கும் இடையில் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தை இந்திரா வரவேற்றார்.

இந்த ஒப்பந்தத்தின் பிரதி ஒன்று இந்திராவிடம் அளிக்கப்பட்டது. சிந்திக்கவேண்டும்; தங்களுடைய அற்ப பூசல்கள் நாட்டின் பரந்த நலன்களுக்கு உகந்தவையா என்றும் எண்ணிப் பார்க்க வேண்டும்.

கட்சிக்குள் இருப்பவர்களைத் தவிர கட்சிக்குள் தகராறைக் கிளப்பிவிட வெளியில் உள்ள சில சக்திகளும் முயற்சிக்கின்றன; அவர்களைச் சமாளிப்பது எளிது. ஆனால் கட்சிக்குள் இருந்து கொண்டு தகராறு கிளப்பும் விரும்பததகாதவர்கள், தங்களை வெளிப்படையாக அடையாளம் காட்டிக் கொண்டு தூக்கி எறியப்படுகின்ற நிலை வராதவரை அவர்களை சமாளிப்பது கடினம் என்று இந்திராகாந்தி கூறினார்.

தொழில்துறையில் அமைதி காக்க 2 ஆண்டுகளுக்கு முன்னர் ஜனாதிபதி கிரி கூறிய யோசனை ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தால் நாட்டின் பொருளாதார நிலைமையே முற்றிலும் வேறுபட்டதாக இருக்கும் என்றார் இந்திரா காந்தி.

# வெனிஜுலா நாட்டுக்கு இந்தியத் தூதர்

வெனிஜுலா நாட்டுக்கு இந்தியாவின் தூதராக நியமிக்கப்பட்டிருக்கும் அவதூத் ராவ்ஜி கோரத்கர் அந்நாட்டு ஜனாதிபதி டாக்டர் ரபேல் கால்தேரா விடம் காரகாசில் ஜூலை 3ம் தேதியன்று நியமனப் பத்திரங்களைச் சமர்ப்பித்தார். வெனிஜுலாவிலேயே தங்கிப் பணியாற்றும் இந்தியத் தூதர் ஒருவர் நியமிக்கப்படுவது இதுவே முதல் தடவை.

# ஓய்வுபெறும் போலீசாருக்கு உடனடி பென்ஷன் பத்திரங்களை அருள் வழங்கினர்

சென்னை, ஜூலை 7— வேலையில் இருந்து ஓய்வு பெறும் போலீசாருக்கு உடனடியாக பென்ஷன் கிடைக்க வகை செய்யும் புதிய திட்டத்தை, தமிழ்நாடு தலைமைப் போலீஸ் அதிகாரி அருள் நேற்று தொடங்கி வைத்தார்.

ஜூலை மாதம் 1-ந் தேதியிலிருந்து நேற்று வரை தமிழ்நாட்டில் மொத்தம் 51 போலீசார் தங்கள் வேலையிலிருந்து ஓய்வு பெற்றனர். [illegible] இன்ஸ்பெக்டர்கள், 8 ரிசர்வ் சப்இன்ஸ்பெக்டர்கள், 16 தலைமை போலீஸ்காரர்கள், 27 போலீஸ்காரர்கள், 1 [illegible], 1 மருத்துவ ஊழியர் ஆகியோர் ஓய்வுபெற்றுள்ளனர்.

இவர்களுக்கான வழி அனுப்பு விழா சென்னை [illegible] நேற்று நடைபெற்றது.

தமிழ்நாடு தலைமை போலீஸ் அதிகாரி அருள், பிராவிடெண்டு இலாகா அதிகாரிகள் சென்னை போலீஸ் கமிஷனர் [illegible], ஆகியோர் விழாவில் கலந்து கொண்டனர்.

விழாவில் நடைபெற்ற போலீசாரின் அணிவகுப்பு மரியாதையை ஐ. ஜி. அருள் ஏற்றுக்கொண்டார்.

தமிழ்நாட்டில் போலீஸ் துறையில் பணிபுரிந்து ஓய்வு பெறுவோருக்கு 30-ம் தேதி பென்ஷனும் 75 சதவீத "[illegible]"மும் உடனே கிடைக்க வகை செய்யும் முன்னோடி திட்டத்தை தமிழக அரசு கொண்டுவந்திருக்கிறது. இதை அருள் தொடங்கிவைத்தார்.

அதன்படி, இம்மாதம் 1-ந் தேதி முதல் தேர்ச்சியாக ஓய்வு பெற்ற 51 போலீசாருக்கும் பென்ஷன், பிராவிடெண்டு நிதி ஆகியவற்றை 25 [illegible] அருள் வழங்கினர். அதற்கான உத்தரவுகளை அவர் கொடுத்தார்.

## நாளைய நிகழ்ச்சி

திருப்புகழ் சபை ஆண்டு நிறைவு விழா: ஸ்ரீ வடக்கு [illegible] திருப்புகழ் சபையின் 20-ம் ஆண்டு நிறைவு விழா 167 தம்பு செட்டித் தெருவிலுள்ள கமடேஸ்வரர் ஆலயம் கந்தரலங்கார மண்டபத்தில் நடைபெறும். மதுரை லக்ஷ்மி அம்மாவின் திருப்புகழ் இன்னிசை, காலை 9 மணி.

# ஆகஸ்ட் 11-ந் தேதி முதல் வேலைநிறுத்தம்: கோவை மில் தொழிலாளர் அறிவிப்பு

கோவை, ஜூலை 7—தங்களுடைய 9 அம்சக் கோரிக்கைகளை மில் நிர்வாகத்தினர் ஏற்காவிடில் அடுத்த மாதம் 11-ந் தேதியிலிருந்து வேலைநிறுத்தம் செய்வதென்று கோவை மாவட்டத்தில் மூன்று தொழிற்சங்கங்களைச் சேர்ந்த மில் தொழிலாளர்கள் அறிவித்துள்ளனர்.

ஐ.என்.டி.யு.சி., எச்.எம்.எஸ்.; ஏ.ஐ.டி.யு.சி. ஆகிய மூன்று தொழிற் சங்கங்களைச் சேர்ந்த பிரதிநிதிகள் கோவையில் கூடி இவ்வாறு முடிவெடுத்தனர்.

ஆகஸ்ட் 11-ந் தேதிக்குள் ஜவுளி மில் தொழிலாளரின் கோரிக்கைகள் ஏற்கப்படாவிட்டால் அன்றைய தினத்திலிருந்து வேலை நிறுத்தம் செய்வதென இத்தொழிற் சங்கங்களின் பிரதிநிதிகள் முடிவுசெய்தனர்.

மின்வெட்டுக் காலத்துக்காக தமிழ்நாடு ஜவுளி மில் கார்ப்பரேஷன் நடத்தும் மில்களின் தொழிலாளர் உட்பட எல்லாத் தொழிலாளர்களுக்கும் முழுச்சம்பளம் வழங்கப்பட வேண்டும்; பதிலி, தற்காலிக [illegible]யாளர்கள், அப்ரண்டிஸ் [illegible] ஆகியோருக்கு "லேஆப்" நஷ்டஈடு அளிக்கப்பட வேண்டும் என்பவை மில் தொழிலாளர்களின் முக்கிய கோரிக்கைகளாகும்.

# விவசாயத் துறையில் ரஷிய வளர்ச்சி

மாஸ்கோ, ஜூலை 7— உணவு உற்பத்தியில் தன்னிறைவு, மேன்மேலும் [illegible] மக்களுக்கு வேலைவாய்ப்பு, கிராமப்புற ஏழை மக்களின் வாங்கும் சக்தி உயர்வு—இவைதான் இந்திய விவசாயத் துறையின் பிரதான நோக்கங்களாக வரும் ஆண்டுகளில் இருக்கும் என்று இந்திய விவசாய ஆராய்ச்சிக் கவுன்சிலின் டைரக்டர் ஜெனரலான டாக்டர் எம். எஸ். சுவாமிநாதன் ஒரு பேட்டியில் கூறினார்.

விவசாயத் தொழில் துறையானது, வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்க உதவுவதோடு, மக்களின் வாங்கும் சக்தியையும் உயர்த்தவேண்டும் என்பது அவரது கருத்து. "இதில்தான் அதாவது, விவசாயத்தையும், தொழில் துறையையும் இணைத்து, ஒரு ஒருங்கிணைந்த வளர்ச்சித் திட்டத்தைத் தீட்டுவதில்தான் ரஷிய விஞ்ஞானிகள், தொழில நுட்ப வியலாளர்களது அனுபவம் நமக்குப் பெருமளவு பிரசாதமாக அமையும்" என்றார் சுவாமிநாதன்.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்னர், ரஷியாவுக்கும் இந்தியாவுக்கும் இடையே விவசாயத் துறையில் விஞ்ஞான, தொழில் நுட்ப ஒத்துழைப்பிற்கான 5 ஆண்டு ஒப்பந்தம் ஒன்று கையெழுத்திடப்பட்டது. இந்திய விவசாயத்தையும், கிராமப்பொருளாதாரத்தையும் மாற்றியமைக்கும் கண்ணோட்டத்திலிருந்துமேற்சொன்ன ஒப்பந்தம் மிகமுக்கியமானதாகும் என்றார் அவர். ஏனெனில்,

"ஒத்துழைப்புக்கான துறை விரிந்து பரந்துள்ளது! தானியங்கள், காய், கனிகள் ஆகியவற்றின் தரத்தை மேம்படுத்துவதிலிருந்து, விஞ்ஞான ரீதியில் பூச்சிகள், நோய்கள் இவற்றைக் கட்டுப்படுத்துவது, பண்ணை எந்திரங்களைப் பயன்படுத்துவது, மண்ணின் வளத்தை உயர்த்துவதுவரை, இவ்வொத்துழைப்பு பலவேறு அம்சங்களையும் கொண்டதாகும்.

இந்த ஒப்பந்தத்தின் கீழ் ஏற்கனவே இந்தியாவிலிருந்து பல விஞ்ஞானிகள், ரஷிய நாட்டின் பல்வேறு நிலையங்களுக்கும் விஜயம் செய்துள்ளனர்; ரஷிய விஞ்ஞானிகள், இந்திய ஆய்வு நிலையங்களுக்கு விஜயம் செய்தனர்.

உயர்ந்த தரமான அரிசியைப் பயிரிடுவது பற்றி தாஷ்கெண்டில் ஒரு கருத்தரங்கமும், கோதுமை பற்றி புதுடெல்லியில் ஒரு கருத்தரங்கமும் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

இந்தியாவிலுள்ள காலநிலையைப் போன்றே ரஷியாவில் உள்ள சில பகுதிகளில் காலநிலை இருப்பதால், இருநாட்டு விஞ்ஞானிகளுக்கும் சில பொதுவான பிரச்னைகள் உள்ளன என்றார் சுவாமிநாதன். சூரியகாந்தி, பருத்தி விதைகளில் தரமானவற்றை நாம் ரஷியாவிலிருந்து வாங்கியதன்மூலம் இந்திய விவசாயம் பயன் அடைந்துள்ளது என்றார் அவர்.

காரகும், சினில்கும் பாலைவனங்களில் மணல் இடம் பெயர்ந்து செல்வதைத் தடுக்கும் முயற்சியில் ஹாலோஸைலான் அக்பைலம்' என்ற புதர்ச் செடிகளை ரஷியாவில் பயிரிட்டு வெற்றி கண்டுள்ளனர். நம் நாட்டிலும் பாலைவனச் சீரமைப்புக்கு ரஷிய அனுபவம் பயன் தரும் என்ற கருத்தைத் தெரிவித்தார் சுவாமிநான். மேலும் செம்மறியாடுகள் வளர்ப்பதிலும் நாம் ரஷியாவிலிருந்து கற்றுக்கொள்வது நன்மை பயக்கும் என்றார்.

தவிர பருத்திமாறிலிருந்து சிட்ரிக் அமிலம் தயாரித்தல், மேன்மேலும் அதிகமாக விவசாயத்துறையில் எந்திரங்களைப் பயன்படுத்துதல், போன்ற துறைகளிலும் ரஷிய அனுபவம் நமக்கு உதாரணமாகத் திகழும் என்றுரைத்தார் சுவாமிநாதன்.

# திருவள்ளூரில் செயற்கை மழை பரிசோதனைகள்

சென்னை, ஜூலை. 7—திருவள்ளூரில் கடந்த ஒரு மாத காலமாக செயற்கை மழை பரிசோதனைகள் நடைபெற்று வருகின்றன என்று வானிலை ஆய்வு நிலைய டைரக்டர் ஜெனரல் பி. கோடீஸ்வரன் தெரிவித்தார்.

இது குறித்து அவர் நிருபர்களிடம் கூறியதாவது:—

[illegible], ஜெனரேட்டர்கள் ஆகியவற்றுடன் வானியல் துறை ஊழியர்கள் இந்தப் பரிசோதனைகளை நடத்தி வருகிறார்கள். சமீபத்தில் டில்லியிலும், ஆக்ராவிலும் நடத்தப்பட்டவற்றைப் போன்றவை இந்த பரிசோதனைகள். மழையைச் செயற்கையாகப் பெய்யச்செய்வது சம்பந்தமான பரிசோதனைகள் இந்தியாவில் பல ஆண்டுகளுக்கு தொடர்ந்து நடக்கும்.

பருவக் காற்றுகளின் தொடக்கம், அமைப்பு பற்றி இந்திய, ரஷிய விஞ்ஞானிகள் ஒரு கூட்டு திட்டத்தின் கீழ் ஆய்வு நடத்தி வருகிறார்கள். ஜூலை 10-ந் தேதியன்று இந்த ஆய்வு முடிவடையும்.

அரபுக் கடலில் பல்வேறு பகுதிகளில் கடல், வான் பற்றிய ஆய்வுகளை நான்கு ரஷியக் கடல் ஆய்வுக் கப்பல்கள் நடத்தி வருகின்றன. வானியல் ஆய்வு சாதனங்கள் பொருத்தப்பட்ட இரண்டு இந்தியக் கப்பல்களும் இந்த திட்டத்தில் பங்குகொண்டுள்ளன. இந்த ஆய்வுகள் முடிவு பெற்றதும், இக்கப்பல்களில் ஒன்றில் ஒரு கருத்தரங்கு நடத்தப்படும் என்று கோடீசுவரன் கூறினார்.

பருவக்காற்றுகளின் நிலை பற்றியும், குறிப்பாக தென்கிழக்கு ஆசியா, ஜப்பான், சீனா ஆகிய பகுதிகளில்பருவக் காற்றுகளின் பொருளாதார விளைவுகள் பற்றியும் ஆய்வு நடத்துவது சம்பந்தமாக சர்வதேச திட்டத்தின் முதல் பகுதி இது என்று அவர் சொன்னார்.

1977-ம் ஆண்டில் இத்திட்டத்தின் இரண்டாவது பகுதி அமல் [illegible]ப்படும். அப்போது ரஷியா வானியல் துணைக்கோள் ஒன்றை செலுத்தும்; பூமத்திய ரேகைக்கு 40 டிகிரி கிழக்கில் அது நிறுத்தப்படும். இந்து மகாசமுத்திரம், வங்காள விரிகுடா ஆகியவற்றின் விரிவான காட்சி இத்துணைக் கோளின் பார்வையில் இருக்கும். 20 நிமிடங்களுக்கு ஒருமுறை மேகங்களின் படங்களை எடுக்க இது உதவிடும்.

பருவக் காற்றுகளின் போக்குகள் பற்றி முன் கூட்டிய சிறந்த முறையில் நிர்ணயிப்பதற்கு இந்த திட்டங்கள் வழி வகுக்கும் என்று கோடீசுவரன் [illegible]னர்.

பல கோடி ரூபாய் மதிப்புள்ள

# தவிடு மோசடி: இலாகா டைரக்டர் உட்பட 43 பேர் கைது

கல்கத்தா, ஜூலை 7— மேற்கு வங்கத்தில் பல கோடி ரூபாய் மதிப்புள்ள கோதுமை தவிடு வினியோகிப்பதில் பெருத்த ஊழல் நடந்திருக்கிறது. இது சம்பந்தமாக மேற்படி இலாகா டைரக்டர் உட்பட 43 பெரும் புள்ளிகள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

இவர்களைத் தவிர ஒரு பிரபல டென்னிஸ் ஆட்டக்காரரும் கைது செய்யப்படலாம் என்று தெரிகிறது. இவர் தற்போது வெளிநாட்டில் இருக்கிறார். இவருடைய தந்தை ஏற்கனவே கைது செய்யப்பட்டு விட்டார்.

தவிடு போன்ற பொருள் வினியோகிப்பதற்கான பர்மிட்டுகள் வழங்கியதில் பெருத்த ஊழல் நடந்திருப்பதையொட்டி இவர்கள் கைது செய்யப்பட்டிருக்கிறார்கள்.

இந்த ஊழல்களில் பிரபு தயாள் [illegible] என்ற பிரபல வியாபாரியும் சம்பந்தப்பட்டிருக்கிறார் என்று தெரிகிறது. இவர் தற்போது தலைமறைவாக இருக்கிறார்.

இந்த ஊழல்களில் புது காங்கிரசைச் சேர்ந்தவர்களும் சம்பந்தப்பட்டிருக்கக் கூடும் என்று நம்பப்படுகிறது. புதுகாங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த புள்ளிகள் எவ்வளவு பெரியவர்களாக இருந்தாலும் சரி, அவர்களும் கைது செய்யப்படுவார்கள் என்று கூறப்படுகிறது.

உணவு கார்ப்பரேஷன் ஊழியர்கள் ஸ்டிரைக் செய்ய

# 6 மாத தடை

புதுடெல்லி, ஜூலை 7— இந்திய உணவு கார்ப்பரேஷன் ஊழியர்கள் 6 மாத காலத்திற்கு எந்த விதமான வேலைநிறுத்தத்திலும் ஈடுபடக்கூடாது என்று இந்திய அரசு தடை விதித்துள்ளது.

பாதுகாப்புச் சட்டத்தின் அடிப்படையில் இந்த புதிய உத்தரவு போடப்பட்டுள்ளது.

இந்தியாவின் பாதுகாப்பையும், சமூகநலன்களையும் கருத்தில் கொண்டு, உடனடியாக இந்தச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்படுகிறது.

# ரஷியாவில் கலர் சிமெண்ட்

மாஸ்கோ, ஜூலை 7—ரஷிய நாட்டின் கிழக்குப் பகுதியிலுள்ள மிகப்பெரும்சிமெண்ட் ஆலையொன்று இனி வெள்ளை, சிவப்பு, மஞ்சள், பச்சை நிறங்களில் அமைந்த சிமெண்டை ஆண்டொன்றுக்கு 1 லட்சத்து 40 ஆயிரம் டன் அளவுக்கு உற்பத்தி செய்யும்.

ரஷியாவில் கஜாக்ஸ்தானிலுள்ள ஸ்ஸ்டோபி சிமெண்ட் ஆலை இந்த உற்பத்தியைத் தொடங்கியுள்ளது. இந்த ஆலை அந்த வட்டாரத்தில் கிடைக்கும் பொருள்களைக் கொண்டு செயல்பட்டுவருகிறது. இந்த ஆலை உற்பத்திசெய்யும் வர்ண சிமெண்ட். அலங்காரமான சிமெண்டுப் பலகைகளைச் செய்யவும், சுவர் அலங்காரத்துக்கும் பயன்படும். இந்த சிமெண்டைக் கொண்டு பூசப்பட்ட கட்டிடங்களுக்கு பல ஆண்டுகளுக்கு வர்ணம் அடிக்கவேண்டிய தேவை இல்லை.

# ரேடியோ கடையில் கள்ளநோட்டு அச்சடிப்பு யந்திரம்

திருச்சூர், ஜூலை, 7— திருச்சூரில் கள்ள நோட்டு அடிக்கும் மற்றொரு முயற்சியை போலீசார் கண்டுபிடித்துள்ளனர்.

போலீசார் எதிர் பார்க்காமலேயே இது கண்டு பிடிக்கப்பட்டது.

குன்னங்குளத்தில் ரேடியோ விற்பனைக் கடை ஒன்றில், கள்ளக்கடத்தல் ரேடியோக்கள் உள்ளனவா என்றுசுங்கத் துறை அதிகாரிகள் சோதனையிட்டனர். அப்போதுஅங்கு அச்சடிக்கும் இயந்திரம், பிளாக்குகள், 20 ரூபாய் நோட்டுகள் ஆகியவை இருப்பது கண்டு பிடிக்கப்பட்டது.

இவைகளைப் போலீசார் கைப்பற்றினர். கடையின் உரிமையாளர் உட்பட இரண்டு பேர் கைது செய்யப்பட்டனர்.

கைப்பற்றப்பட்ட நோட்டுகளில் நீரோட்டம் தவிர, மற்ற எல்லா வேலைகளும் முடிந்திருந்ததாகக் கூறப்படுகிறது.

# அரசு பஸ் கட்டணம் உயராது

சென்னை, ஜூலை 7— சென்னை நகரில் ஓடும் அரசாங்க பஸ்களில் கட்டணங்களை உயர்த்தும் எண்ணம் எதுவும் இல்லை என்று பல்லவா போக்குவரத்து கார்ப்பரேஷன் அறிவித்தது.

டீஸல் எண்ணெய் விலை உயர்ந்துள்ளதனால் பஸ்கட்டணம் உயருமா என்று பல்லவா போக்குவரத்து மேனேஜிங் டைரக்டர் தில்லைநாயகத்திடம் கேட்கப்பட்டதற்கு பஸ் பிரயாணிகள் நலனை உத்தேசித்து, கட்டணத்தை உயர்த்த மாட்டோம் என்றார்.

# மந்திரி பதவிகளில "கோட்டா" ஒதுக்குமாறு கேட்கிறார் பாண்டே

பாட்னா; ஜூலை 7—மொத்த மந்திரி பதவிகளில் மூன்றில் ஒருபங்கை தனது கோஷ்டியினருக்கு ஒதுக்க வேண்டும் என்று பீகார் முன்னாள் முதல்வர் பாண்டே வற்புறுத்தியுள்ளார்.

தனது கோஷ்டிக்கு மந்திரி சபையில் இந்த அளவுக்குப் பிரதிநிதித்துவம் வழங்காவிட்டால் மந்திரிபதவி ஏற்க மாட்டேன் என்று பாண்டே நிபந்தனை விதித்துள்ளார்.

ஆனால், பீகார் புதிய முதலமைச்சர் அப்துல்கபூர் இதை ஏற்பதாக இல்லை. தனது மந்திரிசபையில் கோஷ்டி மனப்பான்மை கொண்டவர்களுக்கு இடம் இல்லை என்று அவர் கூறியுள்ளார்.

கோஷ்டிகளில் தனக்கு எப்போதும் நம்பிக்கையில்லை என்றும் அவர் குறிப்பிட்டார். மாநிலத்தின் நலனையும், கட்சியின் நலனையும் மனதில் கொண்டு நிபந்தனை எதுவும் விதிக்காமல் மந்திரி சபையில் சேருமாறு அவர் பாண்டேயை வற்புறுத்தினார்.

பாண்டே புதிய மந்திரி சபையில் சேருவதுபற்றி அவருடன் எப்போது வேண்டுமானாலும் பேச்சு நடத்தத் தயாராக இருப்பதாக முதல்வர் அப்துல்கபூர் கூறினார்.

# திண்டுக்கல் தோல்வி சிறு கல் தடுக்கியது போல: கருணாநிதி பேச்சு

கடலூர்; ஜூன் 7—திண்டுக்கல் நாடாளுமன்றத் தொகுதி தேர்தல் தோல்வி சிறு கல் தடுக்கியது போன்றதாகும் என்று முதலமைச்சர் கருணாநிதி கூறினார்.

தென் ஆற்காடு மாவட்ட மாணவர் தி. மு. க. ஆலோசனைக் கூட்டம் கடலூரில் நடைபெற்றது. மாநில மாணவர் தி. மு. க. [illegible] செஞ்சி ராமச்சந்திரன் வரவேற்புரை ஆற்றினர்.

இக் கூட்டத்தில் நெல்லிக்குப்பம் கிருஷ்ணமூர்த்தி, எம். எல். ஏ., மாயவன் எம். பி., ஆகியோர் பேசினர்கள்.

முதல்வர் கருணாநிதி [illegible]தாவது:—

திண்டுக்கல் தோல்வி குறித்துச் சொன்னார்கள். அந்தத் தோல்விக்குப் பின்னால் தான் கழகம் மேலும் வலிவோடு திகழ்கிறது. கழகத் தோழர்களிடத்திலே உணர்ச்சியும் கழக வளர்ச்சிக்கான ஆக்க வேலைகளில் ஈடுபடுவதில் எழுச்சியும் இன்றைக்கு ஏற்பட்டிருக்கிறது.

திண்டுக்கல் தோல்விக்குப் பிறகு நாங்கள் கூட எங்கே கழகத்தின் கட்டுக்கோப்பு குலைந்து விடுமோ என்றுதான் எண்ணியிருந்தோம். ஆனால் அதற்குமாறாக, அண்மையில் நடைபெற்ற செயற்குழு—பொதுக்குழுவில் இதுபற்றி ஆராய்ந்தபோது புதிய எழுச்சிஏற்பட்டதைஉணர்ந்தோம்.

கழகத்திற்கு ஏற்பட்டுவிட்ட தோல்வியை எதிர்காலத்திற்கான பாடமாக ஏற்றுக்கொண்டு செயல்படத் துவங்கி விட்டோம். ஒருவேளை திண்டுக்கல்லில் நாம வெற்றி பெற்றிருப்போமானால் நம்மிடையே மெத்தனம் ஏற்பட்டு 1976-ல் பாதிக்கும் நிலை ஏற்பட்டிருக்குமோ என்று எண்ணுகிறேன்.

காட்டுவழியே செல்லும் போது வழியில் சிறுகல் தடுக்கினால் அடுத்த அடி வைக்கும் போது எச்சரிக்கையாக எடுத்தடி வைப்போம். சிறிய கல் தடுக்கினாலும், அடுத்து பெரிய கல் தடுக்கிவிடக் கூடாதே என்று கை விளக்குடன் எச்சரிக்கையாக நடப்போம். அதுபோல திண்டுக்கல் தோல்வி சிறுகல் தடுக்கியது போல. அதனால் எச்சரிக்கை பெற்றோம். இனி விழிப்புடன் இருந்து வெற்றிப் பாதையில் பீடுநடைபோடுவோம என்பதில் நமக்கு சந்தேகம் ஏற்பட்டுவிட முடியாது. அந்த வகையில் இந்த தோல்வி நமக்கு நல்ல பாடமாக அமைந்து விட்டது.

அரசியல் மனமாற்றத்தால் தி. மு. கழகத்தை விட்டு வெளியே சென்ற மாணவர்கள் மீண்டும் இங்கே வந்து சேர்ந்திருக்கிறார்கள். அவர்கள் திண்டுக்கல் தேர்தலுக்குப் பிறகும் கழகத்திற்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் கழகத்தின் உண்மையான வலிவை—கொள்கையில் உறுதிப்பாட்டை புரிந்து கொண்டு கழகத்திற்குத் திரும்பியிருக்கிறார்கள்.

துரோகிகள் [illegible] வெளியேற்றப்பட்ட பிறகு விலகிய பிறகு நடைபெறும் முதல் மாநாடு தென் ஆற்காடு மாவட்ட தி. மு. க. மாநாடு.

### வேலை வாய்ப்பு

படித்த மாணவர்களிடையேவேலை வாய்ப்பின்மை இருந்து வருவது பற்றி இங்கே எடுத்துச் சொன்னார்கள். இதை நாங்கள் உணராதவர்கள் அல்ல. உணர்ந்த காரணத்தால்தான் படித்தவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கப் பல்வேறு திட்டங்களை செயல்படுத்திவருகிறோம்.

அந்த முறையில்தான் இளைஞர் அணித் திட்டத்தை அரசு செயல்படுத்தியது. இந்தத் திட்டத்தின்படி படித்த இளைஞர்கள்—இரண்டாயிரத்துக்கு மேற்பட்டவர்கள்—கிராமப் புறங்களிலே மாதம் ரூ. 175 பெற்றுக்கொண்டு பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

கிராமப்புற மக்களிடையே குடும்பநலம் பற்றி எடுத்துரைக்கவும் முதியோர் கல்வி புகட்டவும்—தீண்டாமையை தடுக்கவுமான சமுதாயச் சீர்திருத்தப் பணிகளிலே இளைஞர் அணியினர் ஈடுபட்டிருக்கிறார்கள்.

தமிழ்ச் சமுதாயம் வாழ வேண்டும், வளரவேண்டும்; தமிழும் தமிழ் மக்கள் வாழ்வும் வளம்பெற வேண்டும் என்ற உணர்ச்சியோடு பொறுப்போடு இளைஞர்கள்தான் இத்தகைய அறப்பணியில் ஈடுபடுகிறார்கள் என்றார் கருணாநிதி.

# சுப்பிரமணியம் புகார்

அண்மையிலே மத்திய அமைச்சர் சி. சுப்ரமணியம் சொன்னார்; மாநில அரசுகளுக்கு மத்திய அரசு ஒரு தாக்கீது அனுப்பியது. ஊராட்சி ஒன்றியப் பகுதிகளிலே தியாகிகள் பெயர்கள் பொறிக்கப்பட வேண்டும் என்றும், அதற்காகும் செலவுக்கான பணத்தை மத்திய அரசு அனுப்பி வைத்தது என்றும், ஆனால் அந்த மாதிரி மாநில அரசு செய்யவில்லை என்றும் சொன்னார்.

உண்மைதான். மத்திய அரசின் தாக்கீதுப்படி மாநில அரசு ஏதும் செய்யவில்லை. அதற்கு ஆட்சேபணை தெரிவித்திருக்கிறோம். எதற்காக இந்த ஆட்சேபணை ஏன் அப்படித் தெரிவிக்கவேண்டும் என்று கேட்பீர்கள்.

மத்திய அரசின் தாக்கீதில், தியாகிகளின் பெயர்களை பஞ்சாயத்து யூனியன் பகுதிகளில் இந்தியில் பொறித்திட வேண்டும் என்று குறிப்பிடப்பட்டிருந்தது.

ஆகவே இந்த அரசு—தி. மு. கழக அரசு "இந்தியில் எழுத முடியாது. வேண்டுமானால் அனுப்பிய பணத்தைத் திருப்பி அனுப்பிவிடுகிறோம்" என்று எழுதியிருக்கிறது என்றார் கருணாநிதி.

## நியூயார்க் பருத்தி மார்க்கெட்

நியூயார்க், ஜூலை. 6—

| | |
|---|---|
| ஆரம்ப விலை | 57.00 |
| முடிவுவிலை | 56.80 |

# கோவை இடைத்தேர்தல்: நெசவாளர் சங்கம் போட்டி

கோயமுத்தூர், ஜூலை 7— கோவையில் நடைபெறவிருக்கும் நாடாளுமன்ற, சட்டமன்ற தொகுதி இடைத்தேர்தல்களில் போட்டியிடுவது என்று கோவைமாவட்ட நெசவாளர் சங்கம் தீர்மானித்திருக்கிறது.

கோவை மாவட்ட நெசவாளர் சங்கத்தின் நிர்வாகக் குழு கூடி, இடைத் தேர்தல்களில் போட்டியிடுவது என்று முடிவு செய்தது. கைத்தறி நெசவாளர்களுக்கு நியாயம் வழங்கும்படி வற்புறுத்த தேர்தலில் போட்டியிட வேண்டும் என்று நிர்வாகக் குழு கூறியது.

இது குறித்து பரிசிலிப்பதற்காக சங்கத்தின் பொதுக் குழு அடுத்த வாரம் கூடுகிறது.

'வீட்டுமாப்பிள்ளை' படத்தில் சாவித்திரி, பத்மினி.

# திரை உலகம்

## ராஜன் மீது நிர்மலா காதல்

ரமணி ஆணாய்ப் பிறந்தவனே தவிர பெண்களுக்குரிய குணங்களுடன் நடை பாவனைகளுடன் இருக்கிருன். ஒரு நாள்—

கோமதியை திருடன் ஒருவன் கட்டிப்பிடித்து வம்பு செய்கிருன். அவளைக் கற்பழிக்க முயற்சிக்கிருன். இந்தக் காட்சியைக் கண்ட ரமணிக்கு ரத்தம் கொதிக்கிறது—வீரம் பிறக்கிறது!

'விட்டுடு பாவி' என்று கடுங்கோபத்துடன் பாய்கிருன். அவனை அடித்துத் துரத்திவிட்டுக் கோமதியை மீட்கிருன்.

வளைந்து நெளிந்து நாணிக் கோணி பெண்ணைப்போல் தோற்றம் தரும் ரமணியின் துணிச்சல் கோமதிக்கு ஆச்சரியத்தைத் தருகிறது. அவள் ரமணியின் காயங்களுக்கு மருந்து போடுகிருள்.

"திருடன் பணத்தையும் நகையையும் கொள்ளையடித்த போதெல்லாம் அவனை அடிக்காத நீங்கள் அவன் என்னைத் தொட்டதும் எப்படி அவனை அடிக்கத் துணிந்தீர்கள்?" என்று கேட்கிருள்.

"அதானே...எனக்கும்தெரியல்லே...!" என்கிருன் ரமணி. தன்னைக் காப்பாற்றிய ரமணி மீது கோமதிக்கு காதல் பிறந்துவிடுகிறது.

"சரண் பிள்ளையானாலும்
ஆண்பிள்ளை நீங்க
நான் சொல்லித
தெரியணுமா?
இந்த சடைவெட்டிப
போட்டு
துடைதட்டி யெழுந்து
நடக்கணும் தைரியமா"

என்று அவள் ரமணியுடன் ஆடிப்பாட ஆரம்பித்து விடுகிருள்.

இக்காட்சி இந்திரா கம்பைன்சாரின் "மாமியார் வஜயம்" படத்திற்காக பெங்களூர் கண்டீரவா ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

ரமணியாக ராஜனும் கோமதியாக நிர்மலாவும் நடித்தனர். கன்னியப்பன் ஒளிப்பதிவு செய்தார்.

வி.கே. ராமசாமி, நாகேஷ் எஸ். வி. ராமதாஸ், கே. கண்ணன், ஒருவிரல் கிருஷ்ணராவ், எம். என். ராஜம் ஏ. சகுந்தலா உதயசந்திரிகா ஆகியோரும் நடிக்கின்றனர்.

வாலியின் பாடல்களுக்கு விஸ்வநாதன் இசையமைக்கிருர்.

கதை—வசனம் எழுதி மதுரை திருமாறன் டைரக்ட் செய்கிருர். வரதன், விஸ்வநாதன் இருவரும் கூட்டாகத் தயாரிக்கின்றனர்.

## பூவிதழ் முத்தம் வண்டுக்கு மட்டும்

"பார்ப்பதைப் பாருங்கள்
கண்களே
நேரம் நல்ல நேரம்
கேட்பதைக்
கேளுங்கள் கைகளே
தடை சால்ல
யாருமில்லை
மனதைச்
கொஞ்சம் அடக்கு
பொறுமை இல்லை எனக்கு
பூவிதழ் முத்தம்
வண்டுக்கு மட்டும்
பூவை உன் மேனி
புதிய கதைகள்
பழக உதவும்
இரவு மந்திரம்"

என்ற கண்ணதாசன் பாடலுக்கு சங்கர் கணேஷ் இசையமைக்க வாணி ஜெயராம் கோவை சௌந்தரராஜன் பாடினர்.

ஸ்ரீ நவநீதா பிலிம்ஸ் "வீட்டுக்கு வந்த மருமகள்" படத்திற்காக ஜெமினியில் இப்பாடல் பதிவாக்கப்பட்டது.

## பக்த துக்காராம் (தெலுங்கு)

அஞ்சலி பிக்சர்ஸ் தயாரித்துள்ள தெலுங்கு வண்ணப்படமான பக்த துக்காராம் ஒரு இன்னிசைச் சித்திரம்.

படத்தில பாடல்களுக்குக் குறைவில்லை—இனிமைக்கும் குறைவில்லை. ஆனல், மிகவும் அதிகமாக இருக்கிறது.

பக்த துக்காராமாக நாகேஸ்வர ராவும், அவரது மனைவியாக அஞ்சலி தேவியும உருக்கமாக பக்தி உணர்ச்சியுடன் நடித்துள்ளனர்.

இந்தப் படத்தில் உள்ள சிறப்பு அம்சம் சிவாஜி சிவாஜி வேடத்தில் சிவாஜி கணேசன் தோன்றுவது! நான்கே காட்சிகளில் தான் நின்றலும் நெஞ்சில் நிறையும் வகையில் அவரது தோற்றமும், நடிப்பும் சிறப்பாக உள்ளன

காஞ்சனா கவர்ச்சியாக இரண்டு நடனங்களை ஆடியிருப்பதுடன் நன்கு நடித்துமிருக்கிருர்.

ஆதிநாராயணராவ் இசையமைத்துப் படத்தைத் தயாரித்திருக்கிருர்.

கண்ணுக்குக் குளுமையான வண்ணப் புகைப்படமும் இனிமையான இசையும் நிறைந்த பக்திப்படம் 'பக்த துக்காராம்'



"குலகௌரவம்" படத்தில் முத்துராமன்.

## இன்றையசினிமா

| | |
|---|---|
| சென்னை | |
| கமலி | அரங்கேற்றம் |
| காமதேனு | வாயாடி |
| சரஸ் | Vonryan's Express |
| நியூ எல்பின்ஸ்டன் | புட்பால் சாம்பியன் (மலையாளம்) |
| நேஷனல் டாக்கீஸ் | வந்தாளே மகராசி |
| ராம் | பொன்னூஞ்சல் |
| தாம்பரம் | |
| எம். ஆர். தியேட்டர் | Paricsay |
| ஸ்ரீ சித்ரா | வீட்டு மாப்பிள்ளை |
| நேஷனல் | சொந்தம் |
| குரோம்பேட்டை | |
| வெற்றி | பொன்னூஞ்சல் |
| வில்லிவாக்கம் | |
| ராயல் | உலகம் சுற்றும் வாலிபன் |

## தங்கப்பதக்கம் படத்தில் கே.ஆர்.விஜயா

சிவாஜி புரொடக்ஷனில் தயாரிக்கும் "தங்கப் பதக்கம்" படத்தில் சிவாஜி கணேசன் மனைவியாக கே. ஆர். விஜயா நடிக்கிருர். மற்றும் ஸ்ரீகாந்த், பிரமிளா, சோ, மனோரமா ஆகியோர் நடிக்கின்றனர்.

மகேந்திரன் கதை வசனம் எழுத சுந்தரம் ஒளிப்பதிவு செய்கிருர்.

பி. மாதவன் டைரக்ட் செய்கிருர்.

## திருலோகசந்தர் டைரக்ட் செய்யும இரண்டு படங்கள்

ராஜேந்திரா கம்பைன்சார் "உலகத்தில் ஒருத்தி" எனும் படத்தைத் தயாரித்து வருகின்றனர்.

கல்லுடைத்துக் கஷ்டப்படுவோருக்கிடையில் வாழும் கூலிக்காரியாக கே. ஆர். விஜயா நடிக்கிருர். உழைப்பாளர் நலனுக்காகப் போராடும் தொழிலாளர் தலைவன் வேடத்தில் முத்துராமன் கதாநாயகனாக நடிக்கிருர்.

சம்பத் சரவணா கம்பைன்சார் "கட்டிலையிடு தாயே" என்று ஒரு படத்தைத் தயாரிக்கின்றனர்.

தாய்மைப்பண்பைவெளிப்படுத்தும் பாத்திரத்தில் கே. ஆர். விஜயா நடிக்கிருர். அந்தத்தாயின் வீரமைந்தனாக முத்துராமன் தோன்றுகிருர்.

இருபடங்களுக்கும் கண்ணதாசன் பாடல்களை எழுத விஸ்வநாதன் இசையமைக்கிருர்.

## தம்பி மீது சிவாஜி கோபம்

"நாரதரிடம் நீங்கள் சபதம் செய்ததை சரியாகத்தெரிந்து கொள்ளாமல் சித்ரசேனனைக் காப்பாற்றுவதாக நான் அவனுக்குச் சத்தியம் செய்து கொடுத்து விட்டேன்" என்றான் கண்ணன் தயங்கித் தயங்கி தன் அண்ணன் பலராமரிடம்—

"அதற்காக ஊர்பார்க்க; உலகம்பார்க்க நாம் மோதிக் கொள்வதா? பிறந்தது முதல் பிரிந்தறியாத சகோதரர்கள் சண்டையிட்டுக் கொள்வதா?" என்றார் பலராமர் கோபத்தோடு.

கண்ணன் இதைத் தவிர வேறு வழியில்லை என்று சொல்லிவிடுகிறன்; பலராமர் உள்ளம் வேதனையால் குமுறுகிறது.

"ரேவதி.... ரேவதி.... நான் வளர்த்த பிள்ளை என்னோடு போருக்கு வரப்போகிருனும். பாசம் மிக்க அண்ணன் தம்பிக்குள் இப்படி ஒரு இக்கட்டான நிலை வருமென்று நீ எதிர்பார்த்தாயா?" என்று தன் மனைவியிடம் கூறுகிருர்.

"இதைத் தவிர்க்க வேறு வழியே இல்லையா?" என்று கேட்கிருள் ரேவதி.

இக்காட்சி சீனிவாசன் கம்பெனியார் தயாரிக்கும் 'கிருஷ்ண லீலா' படத்திற்காக சாரதா ஸ்டுடியோவில் படமாக்கப்பட்டது.

பலராமராக சிவாஜியும் கண்ணனாக சிவகுமாரும், ரேவதியாக தேவிகாவும், ருக்மிணியாக ஸ்ரீவித்யாவும், சித்ரசேனனாக கோவை பாலுவும் நடிக்கின்றனர்.

ஏ. பி. நாகராஜன் கதை வசனம் எழுதி டைரக்ட் செய்கிருர்.

## வரப் பெற்றோம்

"கடமணிமாலை" வேம்பத்தூர் கிருஷ்ணன் தொகுத்து வரப் பெற்றோம். எஸ். கணேசன் ஓவியம் வரைந்துள்ளார்.

கடமணி பதிப்பகம்; 6, தெற்கு கெங்கையம்மன் கோவில் தெரு, சூளைமேடு, சென்னை—94. வெளியிட்டுள்ளன இது ஒரு இலவச வெளியீடு.

அஞ்சுகம் பிக்சர்ஸ் ... காரி' படத்தில் மு. க. முத்து, மஞ்சுளா.

## முருகு பிலிம்ஸ் புதிய படம்

முருகு பிலிம்ஸ் என்ற புதிய நிறுவனத்தார் தயாரிக்கும் முதல் படத்தில் ஜெய்சங்கர் இரட்டை வேடமேற்று நடிக்கிருர். சுந்தர்ராஜன், எம். என். ராஜம் ஆகியோரும் நடிக்கின்றனர்.

ஆரூர்தாஸ் வசனம் எழுதுகிருர். ஏ முருகன், பி. ஏ. பாண்டியன் இருவரும் தயாரிக்கின்றனர்.

எம். கர்ணன் திரைக்கதை—ஒளிப்பதிவு டைரக்ஷனைக் கவனிக்கிருர்.

'மகளுக்காக' படத்தில் ஜெயா, தேங்காய் சீனிவாசன் சுருளிராஜன்.

## மதுவிலே பழையது மங்கையிலே புதியது

மதுவிலே பழையது
மங்கையிலே புதியது
இன்று நான் தருவது
என்றும்மே இனியது

என்று கண்ணதாசன் எழுதியுள்ள பாடலை வாணி ஜெயராமன் பாடினர். சங்கர் கணேஷ் இசையமைத்தனர்.

விஜய சித்ரா பிலிம்சாரின் 'எங்க பாட்டன் சொத்து' வண்ணப் படத்திற்காக சாரதா ஸ்டுடியோவில் இப்பாடலும், முன்னொரு பாடலும் ஒலிப்பதிவு செய்யப்பட்டன இன்னொரு பாடல்—

போடு நூத்துக்கு நூறு
ஆட்டத்தைப் பார்த்து—
மெல்ல
ஆடும் பெண்ணிடம்
உள்ள
தோட்டத்தைப் பார்த்து"

கண்ணதாசன் எழுதியுள்ள இந்தப் பாடலைக் கோவை சௌந்தரராஜன், வாணி ஜெயராம் இருவரும் பாடினர்.

கர்ணன் தயாரித்து டைரக்ட் செய்யும் இப்படம் விரைவில் வெளிவர இருக்கிறது.

Printed by S. V. G. Sowmrajulu at the M. G. P.P.S. Press, No. 4, South Bank Road, Madras-28 and Published by him for the Madras Co-operative Printing and Publishing Society Ltd.
Chief Editor: S. V. G. Sowmrajulu
Honorary Editor: N. Muthukumarasamy